[28th March 1961

*Bus accident*

* 214 Q.—SRI S. K. SAMBANDHAN : Will the Hon. the Minister for Works be pleased to state—

(a) whether the attention of the Government has been drawn to the recent bus accident near the 14th mile on the Cuddalore-Vridhachalam road due to the collapse of the bridge;

(b) if so, whether any report has been received in regard to the safety margin of the bridge; and

(c) the arrangements made for the periodical inspection and test in regard to the strength and safety of bridges?

THE HON. SRI P. KAKKAN : (a) Yes, Sir. The accident occurred in the early hours of 14th November 1960.

(b) The culvert was inspected by the Officers of the Department on 15th September 1959, 28th October and 13th November 1960 and no defects were noticed. It collapsed due to uncontrollable and unprecedented flood caused by the breach of a tank on the upstream side of the culvert. Nobody could have foreseen an occurrence of the accident.

(c) There are specific rules that the officers of the Department should inspect the bridges, causeways, and culverts in charge of the Department once a year and submit a report to the Superintending Engineer on the condition of the structures inspected by them. During monsoon time, the officers usually inspect the bridges and culverts and take vigilant action then and there for their safety and carry out minor repairs wherever necessary.

SRI S. K. SAMBANDHAN : இந்தமாதிரி பழைய பாலங்கள் மிகவும் கீழான நிலையில் கீரல்கள் முதலியவைகளோடு கடலூர்-விருத்தாசலம் பாதையில் இருப்பதை அரசாங்கம் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டதா ?

THE HON. SRI P. KAKKAN : சில பாலங்கள் இந்த மாதிரி மோசமான நிலையில் இருக்கின்றன. அரசாங்கம் அதை அறிந்து அதற்காக ஸ்பெஷல் டிவிஷன்களை ஏற்படுத்தி அங்கங்கே கவனிப்பதற்கு ஏற்பாடு செய்துவருகிறது.

SRI M. ETHIRAJALU : 13—11—1960-ல் அதிகாரிகளால் சோதனை இடப்பட்டதென்று சொல்லப்படுகிறது. விபத்து நடந்தது 14—11—1960-ம் தேதி. அதற்கு முன் தினம் பூராவும் மழை பெய்துகொண்டிருந்ததால் யாரும் போயிருக்க முடியாது என்பது நிச்சயம். சோதனை செய்த அதிகாரி ஹைவேஸ் சீப் இஞ்சினியரா அல்லது அவருக்குக் கீழேயுள்ள உத்தியோகஸ்தர்களா ?

THE HON. SRI P. KAKKAN : சீப் இஞ்சினியர் போகவில்லை. அவருக்குக்கீழேயுள்ள அதிகாரிகள், ரோடு இன்ஸ்பெக்டர்கள் போன்றவர்கள் பார்த்திருக்கிறார்கள். அதாவது அந்தப்பாலம் கண்மாய் உடைந்து வெள்ளம் அதிகமாக வந்ததால்தான் இந்த சேதம் ஏற்பட்டதாகத் தெரிகிறது.

28th March 1961]

SRI A. K. THANGAVEL MUDALIAR : குறுகிய பாலங்களையும், வாராவதிகளையும் அகலப்படுத்த சர்க்காருக்கு உத்தேசம் உண்டா? அப்படியானால் எப்போது அதை நிறைவேற்ற முடியும்?

THE HON. SRI P. KAKKAN : இந்த விபத்து நடந்த இடத்தில் புதிதாகப் பாலம் கட்ட திட்டமிடப்பட்டிருக்கிறது. பாலம் கட்டும் வரை பை-பாஸ் ரோடாக இருக்க ரூ. 11,800 செலவில் ரோடு போட்டிருக்கிறோம். ரூ. 35,000 செலவில் 1961-62-ல் புதிய பாலம் கட்டுவதற்குத் திட்டமிட்டிருக்கிறோம். வேலை துரிதமாக நடக்க வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது.

SRI A. K. THANGAVEL MUDALIAR : குறுகிய ரோடுகள் பூராவையும் இப்போது சீர்திருத்தம் செய்ய முடியுமா?

THE HON. SRI P. KAKKAN : இது பாலங்கள் சம்பந்தப் பட்ட கேள்வி. ரோடுகளைப் பற்றியதல்ல.

SRI M. ETHIRAJALU : நெய்வேலித் தொழிற்சாலை ஏற்பட்டிருக்கிறதால் பெரிய இயந்திரங்கள் அந்த ரோடுகள் வழியாகப் போகமுடியாமல் இருக்கிறது. அதைத் தவிர்க்க புது ரோடு போடவேண்டுமென்று சொல்லப்படுகிறது. அது உண்மையா?

THE HON. SRI P. KAKKAN : நெய்வேலித் திட்டம் ஏற்பட்டதன் காரணமாகத்தான் இந்த பாலங்களை நல்ல முறையில் செப்பனிடப்படவேண்டுமென்றும், சாமான்கள் மிஷின்கள் போகும் போது சேதமிருக்கக்கூடாது என்றும் எல்லாப் பாலங்களையும் நன்றாகப் பார்த்து கவனித்துக் கட்டுவதற்கு ஏற்பாடு செய்து வருகிறது.

DR. A. SREENIVASAN : இந்தப் பாலங்கள் சம்பந்தப்பட்ட வரை பிரஷர் டெஸ்ட், லோடு டெஸ்ட் என்று 6 மாதத்திற்கு ஒரு தடவை 12 மாதங்களுக்கு ஒரு தடவை செய்யவேண்டுமென்று இருக்கிறதே, அதை இஞ்சினியரிங் ஸ்டாப் செய்துவருகிறார்களா?

THE HON. SRI P. KAKKAN : இப்போது லோடு டெஸ்ட் வைத்து பரிசீலனை செய்வதற்கு ஏற்பாடு செய்துவருகிறோம்.

MR. CHAIRMAN : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENTS.

### (1) MESSAGE FROM THE GOVERNOR.

MR. CHAIRMAN : I have received messages from the Governor of Madras recommending to the Legislative Council the consideration of the following Bills :

(1) The Madras Appropriation (No. 2) Bill, 1961.

(2) The Madras Appropriation (No. 4) Bill, 1961.

(3) The Madras Appropriation (No. 3) Bill, 1961.